පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

42 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

කර්ණාටක සංගීතය I, II
கர்நாடக சங்கீதம் I, II
Carnatic Music I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

## கர்நாடக சங்கீதம் I

**கவனிக்க:**
(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

1. கர்நாடக சங்கீதம் கற்பிக்கும்போது ஜதீஸ்வரத்திற்கு அடுத்ததாகக் கற்பிக்கப்படும் உருப்படி
(1) கீதம் (2) வர்ணம் (3) ஸ்வரஜதி (4) அலங்காரம்

2. திரிபுடை தாளத்தின் இரு துருதங்களையும் நீக்கினால் வரும் தாளம்
(1) ரூபக தாளம் (2) ஏக தாளம் (3) மட்டிய தாளம் (4) அட தாளம்

3. பஞ்சம ஸ்ருதிக்கு பயன்படுத்தப்படும் ஸ்வர நிலைகள்
(1) ஸகஸ் (2) ஸபஸ் (3) ஸமஸ் (4) ஸதஸ்

4. விலோம சிட்டைஸ்வரத்தைக் கொண்ட உருப்படி
(1) ஜதீஸ்வரம் (2) வர்ணம் (3) இராகமாலிகை (4) தில்லானா

5. ✳, ⁓⁓⁓ ஆகிய இசைக்குறியீடுகள் குறிப்பவை முறையே
(1) அன்னியஸ்வரம், ஏற்றஜாரு (2) அன்னியஸ்வரம், கமகம்
(3) வளைவுகோடு, அங்கமுடிவு (4) இறக்கஜாரு, படுக்கைக்கோடு

6. திருவாசகம் பாடப்படும் இராகம்
(1) மத்தியமாவதி (2) ஆனந்தபைரவி (3) பிலஹரி (4) மோகனம்

7. ஸரிஸபா;; தபதா மா; என்னும் ஸ்வரக் கோர்வையில் வரும் மொத்த அட்சரங்கள்
(1) 13 (2) 14 (3) 16 (4) 17

8. ஆலயங்களில் அதிகாலையில் பாடப்படுவது
(1) தேவாரம் (2) திருப்பள்ளியெளிச்சி (3) திருவாசகம் (4) திருச்சதகம்

9. ஸப்த தாளங்களின் லகுவை ஜாதிபேதம் செய்யும் போது உருவாகும் தாளங்களின் எண்ணிக்கை
(1) 16 (2) 18 (3) 21 (4) 35

10. எத்துக்கடைப் பல்லவி எனப்படுவது
(1) ஜதீஸ்வரத்தின் சரணம் (2) ஸ்வரஜதியின் பல்லவி
(3) வர்ணத்தின் சரணம் (4) கீர்த்தனையின் சரணம்

11. பின்வருவனவற்றுள் ஜனகராகத்தின் மறுபெயர் **அல்லாதது**
(1) இராகாங்க இராகம் (2) தாய் இராகம்
(3) மேளகர்த்தா இராகம் (4) ஜன்னிய இராகம்

[பக். 2 ஐப் பார்க்க

12. 'இந்தளம்' என்ற பண்ணிற்கு ஒப்பான கர்நாடக இராகம்
(1) பந்துவராளி (2) மாயாமாளவகௌளை (3) பைரவி (4) காம்போஜி

13. 72 மேளகர்த்தா இராகங்களிலும் கீர்த்தனைகளை இயற்றிய இலங்கை இசைக்கலைஞர்
(1) புத்துவாட்டிசோமு (2) கனம் கோடீஸ்வரய்யர் (3) N. வீரமணிஐயர் (4) N. சண்முகரத்தினம்

14. 'வைணீகர்' என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படுபவர்கள்
(1) வீணை வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள் (2) வயலின் வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள்
(3) வேணுகானம் இசைப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள் (4) மிருதங்கம் வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள்

15. ஸமகமபதநிஸ் - ஸ்நிதபமகரிஸ என்ற ஆரோகண அவரோகணத்தையுடைய இராகம்
(1) மோகனம் (2) கமாஸ் (3) பிலஹரி (4) மத்யமாவதி

16. ஏழு ஸ்வரங்கள் பிறப்பதற்கு அடிப்படையாக இருந்த ஸ்வரங்கள்
(1) ஸரிக (2) ரிகம (3) நிஸரி (4) ஸபஸ

17. இந்தியாவின் திருச்சி வானொலியில் முதல் முதலில் கச்சேரி செய்த இலங்கையர்
(1) சரஸ்வதி பாக்கியராஜா (2) என். சண்முகரத்தினம்
(3) முழக்கம் முருகப்பா (4) என். வீரமணிஐயர்

18. "குசேலர்" என்னும் திரைப்படத்தில் குசேலராகப் பாத்திரமேற்று நடித்தவர்
(1) பாபநாசம்சிவன் (2) முத்துத்தாண்டவர் (3) அருணாசலக் கவிராயர் (4) வீரமணி ஐயர்

19. எழுதாக் கவிதைகள் எனப்படுபவை
(1) வேதங்கள் (2) தேவாரங்கள் (3) நாட்டார் பாடல்கள் (4) கீர்த்தனைகள்

20. மங்கல வாத்தியங்கள்
(1) மிருதங்கம், தவில் (2) தவில், வயலின் (3) தவில், புல்லாங்குழல் (4) தவில், நாதஸ்வரம்

21. ஸட்ஜம், சருஸ்ருதி ரிஷபம், சுத்தமத்யமம், பஞ்சமம், சதுஸ்ருதி தைவதம் ஆகிய ஸ்வரஸ்தானங்களைக் கொண்டுள்ள இராகம்
(1) மலஹரி (2) ஹம்சத்வனி (3) சுத்தஸாவேரி (4) பிலஹரி

22. தெலுங்குப் பதங்களை இயற்றிய வாக்கேயகாரர்
(1) கனம் கிருஷ்ணய்யர் (2) ஷேத்ரக்ஞர்
(3) பச்சிமிரியம் ஆதியப்பையர் (4) மாம்பழக்கவிராயர்

23. மாயாமாளவகௌளை இராகத்தின் நேர் பிரதிமத்யம இராகத்தின் மேள எண்
(1) 51 (2) 53 (3) 56 (4) 58

24. "பண்ணும் பதமேழும்" என்ற தேவாரம் பாடப்பட்ட தலம்
(1) திருச்செங்காட்டங்குடி (2) திருவாவினன் குடி
(3) திருவீழிம்மிழலை (4) திருநெல்வாயில் அரத்துறை

25. பல இராகங்களைக் கொண்டமைந்த கர்நாடக சங்கீத உருப்படி
(1) இராகஅளிக்கை (2) இராகமாலிகை (3) இராகமாளிகை (4) இராகசங்கமம்

26. "குருகுஹ" என்ற முத்திரையையுடைய வாக்கேயகாரர்
(1) தியாகராஜ ஸ்வாமிகள் (2) முத்துஸ்வாமி தீக்ஷிதர்
(3) சியாமா சாஸ்திரிகள் (4) பாபநாசம்சிவன்

27. "பூத்தேர்ந்தாயென" என்னும் தேவாரம் அமைந்துள்ள பண்
(1) புறநீர்மை (2) முல்லைப்பண் (3) கம்பீரநாட்டை (4) பழந்தக்க ராகம்

28. ஓர் அலங்காரத்தில் வரும் ஆவர்த்தனங்களின் மொத்த எண்ணிக்கை
(1) 08 (2) 10 (3) 12 (4) 14

29. "இன்னல் கூட்டி இன்பமூட்டி...." எனத் தொடங்கும் சரணத்தையுடைய கீர்த்தனை அமைந்துள்ள இராகம்
(1) பந்துவராளி (2) ஆரபி (3) சுத்தஸாவேரி (4) சங்கராபரணம்

[பக். 3 ஐப் பார்க்க

**30.** "உன்னையல்லால்" என்ற சிம்ஹேந்திரமத்யம இராக கீர்த்தனையை இயற்றியவர்
(1) பாபநாசம்சிவன் (2) கோபாலகிருஷ்ண பாரதியார்
(3) முத்துத்தாண்டவர் (4) கோடீஸ்வரய்யர்

**31.** மநி தநி பத மப - என்பது ஓர் / ஒரு
(1) ஜண்டைப் பிரயோகம் (2) தாட்டுப் பிரயோகம்
(3) திரிஸ்தாயி பிரயோகம் (4) அலங்காரம்

**32.** கர்நாடக இசைக்கச்சேரியில் பிரதான பக்கவாத்தியமாக வாசிக்கப்படுவது
(1) மோர்சிங் (2) கடம் (3) வீணை (4) வயலின்

**33.** அஸம்பூர்ணமேள பத்ததிக்கு அமைவாக தமது கிருதிகளை இயற்றியவர்
(1) தியாகராஜஸ்வாமிகள் (2) முத்துஸ்வாமி தீக்ஷிதர்
(3) முத்துத்தாண்டவர் (4) கோபாலகிருஷ்ண பாரதியார்.

**34.** ஹிந்துஸ்தானி இசைக்கச்சேரிகளில் சுருதிக்காகவும் தாளத்திற்காகவும் பயன்படுத்தப்படும் வாத்தியங்கள் முறையே
(1) தம்புரா, தபேலா (2) தம்புரா, சித்தார் (3) சாரங்கி, தபேலா (4) ஷெனாய், மிருதங்கம்

**35.** விஷம எடுப்புகளாவன
(1) அதீதம், சமம் (2) ஆஹதம், அதீதம் (3) அனாஹதம், அதீதம் (4) சமம், ஆஹதம்

**36.** சங்கராபரண இராகத்தின் நிஷாதத்தை கோமளமாக மாற்றினால் வரும் இராகம்
(1) ஸிம்ஹேந்திர மத்யமம் (2) கல்யாணி
(3) கரஹரப்ரியா (4) ஹரிகாம்போஜி

**37.** பின்வரும் வரைபினால் குறிக்கப்பட்டுள்ள ஆரோகண அவரோகணத்தை உடைய இராகம்




(1) மத்யமாவதி (2) ஹம்சத்வனி (3) ஆரபி (4) பிலஹரி

**38.** 72 மேளகர்த்தா சக்கரத்தில் 1 -36 வரையான இராகங்களை உள்ளடக்கிய பகுதி
(1) பூர்வாங்கம் (2) இராகாங்கம் (3) உத்தராங்கம் (4) அஷ்டகம்

**39.** ஜனக இராகத்தின் முக்கிய இலட்சணம் பற்றிய **பிழையான** கூற்று
(1) இது சம்பூர்ண ஆரோகண அவரோகணத்தை உடையது.
(2) இதன் ஆரோகண அவரோகணம் ஸப்தகமாக அமைந்துள்ளது.
(3) இது கிரம சம்பூர்ண ஆரோகண அவரோகணத்தை உடையது.
(4) இது ஆரோகணத்திலும் அவரோகணத்திலும் ஒரே ஸ்வரஸ்தானங்களைக் கொண்டிருக்கும்.

**40.** இந்தியாவின் கல்விப் பாடநெறியில் இசையினை ஒரு பாடமாக அறிமுகப்படுத்தியவர்
(1) P. சாம்பமூர்த்தி (2) கவிக்குஞ்சர பாரதி
(3) சுப்பிரமணிய பாரதியார் (4) பாலுஸ்வாமிதீக்ஷிதர்

* *

[பக். 4 ஐப் பார்க்க

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

42 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

| | |
|---|---|
| කර්ණාටක සංගීතය | I, II |
| **கர்நாடக சங்கீதம்** | I, II |
| Carnatic Music | I, II |

## கர்நாடக சங்கீதம் II

**கவனிக்க:**
✻ **முதாலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு **மாத்திரம்** விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.
(i) நாயகா நாயகி பாவத்தில் அமைந்த சாகித்தியத்தைப் பிரதானமாகக் கொண்ட உருப்படி யாது?
(ii) அசல ஸ்வரங்கள் யாவை?
(iii) சங்கீர்ண ஜாதி திரிபுடை தாளத்தின் மொத்த அட்சர எண்ணிக்கை யாது?
(iv) 72 மேளகர்த்தா சக்கரத்தில் பந்துவராளி இராகம் எவ்வாறு அழைக்கப்படுகிறது?
(v) பரத நாட்டிய அரங்கில் வாசிக்கப்படும் பிரதான தாள வாத்தியம் யாது?
(vi) ஸரிகிமபதிநி - என்னும் சங்கேதாட்சரங்களை எடுத்துக் கொள்ளும் மேளகர்த்தா இராகம் யாது?
(vii) கதலி ரஸத்திற்கு ஒப்பான ரஸத்தினையுடைய கிருதிகள் இயற்றிய வாக்கேயகாரர் யார்?
(viii) 'நவகோடி நாராயணன்' என்னும் சிறப்புப்பெயரால் அழைக்கப்பட்டவர் யார்?
(ix) இந்திய சங்கீதத்தின் **இரு** பெரும் பிரிவுகளும் யாவை?
(x) கோபால கிருஷ்ணபாரதியார் இயற்றிய பிரபல்யமான கீர்த்தனைகள் **இரண்டினைத்** தருக.

**2.** பின்வரும் இராகங்களுள் விரும்பிய ஓர் இராகத்தின் இலட்சணத்தை விரிவாக எழுதுக. (உருப்படிகள், சஞ்சாரங்கள் எழுதப்படல் வேண்டும்.)
(i) சங்கராபரணம்
(ii) ஆரபி
(iii) பந்துவராளி

**3.** பின்வரும் உருப்படி வகைகளில் விரும்பிய ஓர் உருப்படியின் இலட்சணத்தை விரிவாகத் தருக. (இயற்றியவர் பெயர்கள், உதாரணங்கள் இவ்விரண்டு எழுதப்படல் வேண்டும்.)
(i) கீதம்
(ii) ஜதீஸ்வரம்
(iii) தில்லானா

**4.** (i) பண்ணிசை என்பதன் வரைவிலக்கணத்தைக் கூறுக.
(ii) பண்ணிசையின் வரலாற்றினைச் சுருக்கமாக எழுதுக.
(iii) நீர் அறிந்த பத்துப் பண்களின் பெயர்களையும் அதற்கு ஒப்பான இராகங்களையும் எழுதுக.

**5.** (i) தவில் வாத்தியத்தின் படம் வரைந்து, அதன் பாகங்களைக் குறிப்பிடுக.
(ii) இவ்வாத்தியத்தின் சிறப்புகள் **இரண்டினைத்** தருக.
(iii) இவ்வாத்தியத்தின் அமைப்பையும் வாசிக்கும் முறையினையும் விளக்குக.
(iv) இவ்வாத்தியத்தை வாசித்துப் பிரபல்யமடைந்த இலங்கை வித்வான்கள் **இருவரின்** பெயர்களைத் தருக.

[பக். 5 ஐப் பார்க்க

**6.** அருணாசலக் கவிராயரது வாழ்க்கை வரலாற்றினையும் அவரது இசைப் பணிகளையும் பின்வரும் விடயங்களின் கீழ் ஆராய்க.

(i) வாழ்க்கைக் காலம்
(ii) பிறந்த இடம்
(iii) பெற்றோர்
(iv) இளமைக் கல்வி
(v) வாழ்க்கைச் சம்பவங்கள்
(vi) இசைப்பணிகள்
(vii) இயற்றிய உருப்படிகள் இரண்டு

**7.** "இசையினை வளர்த்தெடுப்பதில் ஆலயங்களின் பங்கு அளப்பரியது" இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை ஆராய்க.

**அல்லது**

"இலங்கையின் இசை வளர்ச்சியில் 20 ஆம் நூற்றாண்டு ஒரு பிரதான காலகட்டமாகும்." இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை ஆராய்க.

* * *